உ

சிவமயம்.

சந்தனக்குறடென்கிற

# நிமித்தசூடாமணியும்

௧௦௮-இலக்கமென்கிற

# சகாதேவசாஸ்திரம்

அடங்கியிருக்கிற சுத்தப்பிரதி.

இஃது

கோயமுத்தூர் புத்தகவியாபாரம்

## இ. ஒன்விராயகவுண்டர்

பலஏட்டுப்பிரதியைக்கொண் டாராய்ந்து

---

## எஸ். பி. ராஜாராம்

அவர்களாற்றமது,

சென்னை சூளை,

ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908,

உ

சிவமயம்.

சந்தனக்குறடென்கிற

# நிமித்த சூடாமணியும்

௧௦௮-இலக்கமென்கிற

# சகாதேவ சாஸ்திரம்.

அடங்கியிருக்கிற சுத்தப்பிரதி.

இஃது

கோயமுத்தூர் புஸ்தகவியாபாரம்

**இ. ஒன்னியகவுண்டர்**

பல எட்டுப்பிரதியைக்கொண் டாராய்ந்து



சென்னை சூளை

**எஸ். பி. இராஜாராம்**

அவர்களால்

தமது

சென்னை:

ஸன் ஆப் இந்தியா பிரசில்

பதிப்பிக்கப்பட்டது.

1907.

# நூதன புத்தகங்கள்,

## சுந்தராங்கி.

அநேக நீதிபோதங்களை யடக்கி தெவிட்டாதஇன்பத்தைக் கொடுக்குந் தன்மையது ஆதிமுதல் அந்தம்வரையில் எளியதமிழ் வசன நடையில் எழுதப்பட்டிருப்பதால் சாமானிய படிப்பினையுடைய நம் பெண்மக்கள் கூட வாசிக்கலாம். விலை அணா 6. வி. பி. சார்ஜ். அணா 2

## மோகனசுந்தரி.

(ஓர் நவீநக தமிழ் நாவல்.)

உலகத்தில் மாற்றாந்தாயாக வருபவள். முதற்றாரத்தினுடைய மக்களைப் படுத்தும்பாடு இவ்வளவவ்வளவல்லவென்பதை அனுபவிகள் அறிந்தே யிருப்பார்கள். உலகத்தில்நடக்கும் மாற்றாந்தாயின் அக்கிரமத்தைப்பற்றியே இக்கதையில் எழுதியிருக்கிறது,

இதன்விலை அணா-6 வி. பி. சார்ஜ் அணா-2

பிருஹஜ்ஜாதகமென்னும்

## மங்களேஸ்வரியம்.

இது மகாசோதிட சாஸ்திரங்களிலொன்று மேலும் ஓராசாரம் பாராசாரிய முதலிய சோதிட சாஸ்திரங்களுக்கும் இணையானதுஎல்லாச்சோதிடர்களும் கையாளத்தகுந்தது. இச்சாஸ்திரம், முற்காலத்ததாயும், மகா சிரேஷ்டமானதாயு மிருப்பதால், இதைப்பற்றி அதிகமாய் தெரிவிக்க வேண்டியதில்லை. இதனுண்மை பரம்பரையான சோதிடர்களுக்கு நன்றாய்த் தெரியவருமென்பது உண்மையே.

புத்தகம் 1-க்கு விலை ரூபா 1 4 0. வி-பி-சார்ஜ் அணா. 4.

## மனோரஞ்சனி.

இக்கதையானது இதன் பெயரானே படிப்போர் கேட்போர் மனதை இரஞ்சிக்கச்செய்யும். இதில் கல்வியிற்சிறந்த பல புத்திமான்களது உயர்ந்த கருத்துக்களும், பெண்களின் கற்புநிலையினாலுண்டாகும் ஏற்றமும், செல்வம் தரித்திரமென்னு மிரண்டும் சகடக்கால்போல்வதென்றும், ஒவ்வொருவரும் தெய்வவருளைப்பெற முயற்சிக்க வேண்டுமென்பதும், ஆசைக்கடிமையாதல் கூடாதெனவும்,பேராசையின் தாழ்மையும், நல்லறிவாலடையும் நன்மையும்,யோக்கியதையைப்பற்றிய பிரசங்கமும், முயற்சி எந்நாளும் நன்மையையே பயக்குமென்பதும், ஞானிகளின் தரிசனவிசேடமும், சௌரியத்தின் ஏற்றத்தாலுண்டாகும் சிறப்பும், கல்வியினால் ஒருவன் எய்தும் பயனும் ஆகிய அநேக அரிய விஷயங்களைக் கதா ரூபமாக நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது, இதன் விலை அணா 12. வி-பி-சார்ஜ் அணா 3.

எமதுமேல்விலாசம்.

இராஜாராம் அண்டு கம்பெனி.

சூளைபோஸ்டு மதராஸ்.



ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

சந்தனக்குரடென்கிற

# நிமித்தசூடாமணி.

மாதவன் துதி.

காப்பு - வெண்பா.

சந்தனக்குறடைநிதந் தாரணியோர்பரவநனி
சுந்தரஞ்சேர்மாதவன் துணையாகும் - விந்தைமிகு
காரியங்களெல்லாங் கண்டபடிகைகூடும்
வீரியமாய்ப்பாரீர் வியந்து.

## நூல்வரலாறு.

துவாபரயுகத்தில் துரோபதிநிமித்தந் தருமபுத்திரர் துரியோதனனுடன் சூதாடி ராச்சியந்தோற்று வனவாசம்போய் அக்கியாதவாசங்கழித்து விராடபுரத்திலிருந்து ஸ்ரீகண்ணனை நினைக்குங் காலத்தில் பரவாசுதேவன்வந்து பயப்படாதே ஆதியில் நளன்பட்டகஷ்டத்தையும் அரிச்சந்திரன்பட்ட கஷ்டத்தையும் எடுத்துரைத்து நீங்களுஞ் சுகத்தையடைவீர் ஆயினும் இந்த ௱-൰-உ-க - என்கிற கணக்குகளையுடைய சந்தனக்குரட்டைத் தியானித்து மூன்றுதரம் உருட்டினால்நன்மையடைவீரென்றுசொல்லி துவாரகைக்குப்போயினர். ஆதலால், இதை சிரத்தையோடு தியானித்துப்போட்டால் அவரவர்க்குரிய நன்மை தீமை யடைவாரென்பது நிச்சயமாதலால் இதை யவரவர் வழிபடு கடவுள் வணக்கத்தைத்துதித்து நூலைப் படித்துப்பார்த்தால் சுகமும் அசுகமுந் தெரியுமென்பது திண்ணம் திண்ணம்.

### நூலாரம்பம்.

செந்தமிழோர்கள்முன்னே தெரியவேயுரைத்தசொல்லை
சந்தனக்குறட்டினாலே சாங்கோபமாகத்தேர்ந்து
முந்தியலக்கம்நூறு பத்திரண்டொன்றுதன்னை
பைந்தொடியாளேமூன்று திறமதையுருட்டிப்பாரே,

(இ-ள்) செம்மையாகிய தமிழ்வல்லவர் சந்தனக் கட்டையை குறடு செய்து அதற்குநூறிலக்கமிட்டு அதற்குக்கீழே பத்திலக்கமிட்டு அதற்குக்கீழே இரண்டிட்டு அதற்குக் கீழே ஒன்றிட்டு முக்காலுருட்டி நன்மை தீமையறிந்து பார்க்கிறவரே புலவராம் எ-று.

உருட்டியகயிற்றிலொன்று வொன்றுடனென்றுகண்டால்
க உருட்டியநிமித்தநன்று வுற்றதுவாய்க்குமப்பா
க தெருட்டியசெல்வமோங்குந் திரமொடுவருவாரிப்பால்
க உருட்டியயுருவத்தாளே யுண்மையாயுரைப்பாய்தானே.

(எ-து.) க க க ஆனால் இந்த நிமித்தம் நீர் நம்மை வினவிக்கேட்ட கருமம் வாய்க்கும் தூரப்போனவர் வருவார் பொல்லாப்பு ஒன்று மில்லை உத்தமம். (க)

ஒன்றுடனென்றிரண்டு கயிற்றினிலிசைக்குமாகில்
க நன்றுநீர்வினவிக்கேட்ட காரியம்நாதனாலே
க இன்றுநீர்தொடுத்ததெல்லா மிதமொடுகூடும்லாபம்
உ துன்றியபலனுமுண்டு தொலைகடன்கொடுத்தாற்போராம்.

(எ-து) க க உ ஆனால் தொடுத்தகருமமாம் கேட்டகாரியம் பலனுண்டு கடன்கொடுத்தால் வராது போரால்முடியும் மத்திபம். உ

உரைத்திடுமொன்றேடொன்று பத்துவந்துதிக்குமாகில்
க நிரைத்திடுகருமந்தீதாந் தீமையும்பொல்லாப்புண்டாம்
க தரைக்குள்மன்னவனுநோக்கான் சத்துருமிகவுண்டாகும்
ய விரைத்திடுவிசனமெய்தும் வீசனுல்வினைவந்தெய்யும்.

(எ-து) க க ய ஆனல் சனியொத்தவனும் செவ்வாயொத்தவனும் தோஷமுண்டு சத்துருமிகுதியுண்டு யாதொரு காரியமும் பலியாது மத்திபம், ௩

உதித்திடுமொன்றேடொன்று நூறுவந்துதிக்குமாகில்
க மதித்ததோர்கருமநன்று வல்வினைதானும்நீங்கும்
க அதித்திடுபயமும்வேண்டா மாசான்றன்சகாயத்தாலே
ஙா விதித்துநீர்செய்ததெல்லா வினைப்பயமில்லைநன்றே,

(எ-து.) க க ஙா ஆனல் ஈஸ்வரனாலே விசாரிக்குங்காரியம் நன்மை விரோதமில்லை பயம்வேண்டாம் யாதொரு காரியஞ்செய்தாலும் பலிக்கும் உத்தமம், ௪

உண்மையாவொன்றிரண்டு மொன்றுவந்துதிக்குமாகில்
க மண்மகளருளினாலே வருந்தியவருத்தந்தீரும்
உ தண்மையாமுயன்றதெல்லாந் தரணியில்பலிக்குஞ்சால
க வண்மையாமென்றசேதி வாழ்ந்திடுமிடையூறில்லை.

(எ-து.) க உ க ஆனல் மனதிலுள்ள வருத்தந்தீரும் சரீரசௌக்கியமும் செய்தகருமமும்பலிக்கும் சஞ்சலம்வேண்டாம் யாதொருயிடையூறில்லை உத்தமம். ௫

இசையுறவொன்றிரண்டு விரண்டுவந்துதிக்குமாகில்
க விசையொடுநினைத்ததெல்லாம் வினைவகைகூடும்லாபம்
உ மிசைபெறுமிடையூறில்லை மெல்லியராலேநன்மை
உ அசைவில்லையவர்களாலே அனேகநன்மையுமுண்டாமே.

(எ-து.) க-உ-உ-ஆனால் மனதிலெண்ணிய காரியங்கைகூடுந் தூரம் போனவர் வருவார் சிநேகத்தால் நன்மையுண்டு இது வுத்தமம். (௬)

இசையவேவொன்றிரண்டு பத்துவந்துதிக்குமாகில்
க விசையுறநினைத்ததெல்லாம் விபரீதஞ்செயவேயில்லை
உ வசையுறவரசராலே வல்லிடிகலகமுண்டு
௩ அசைவில்லையொருவராலே யானதோர்நூலினாலே.

(எ-து.) க-உ-௩-ஆனால் மனதிலெண்ணியகாரியம் பலியாது அரச னற்றோஷங் குறித்தகாரிய மடுத்தோர்க்குச் சேதம்வருகும் வினையதி கமாகும் மத்திபம். எ

வல்லோரொன்றிரண்டு நாறுவந்துதிக்குமாகில்
க நல்லதொன்றுளத்தாலுண்டு நாடியநலங்கூடாது
உ இல்லமேமறித்துவந்து மடிபிடித்திழுத்துச்சண்டை
௪ வல்லவேயாகுமப்பா வருவதுநீங்குதானே.

(எ-து.) க-உ-௪-ஆனால் நீ நினைத்தகாரியமொன்றுண்டு எண்ணிய காரியமாகாது உடனே மடிபிடிசண்டைவரும் அதமம். அ

நாடியவொன்றுபத்து பத்துவந்துதிக்குமாகில்
க கூடியநினைத்ததெல்லாங் கோளுடன்பிணியுந்தீரும்
௩ நீடியமுசிப்புநீங்கும் நீங்கிடாச்சிறையுநீங்கும்
௩ தேடியபொருள்கைகூடிடுஞ் சிந்தித்தபயமுந்தீரும்.

(எ-து.) க-௩-௩-ஆனால் நினைத்தகாரியங்கைகூடும் ராகுகேது சனி யிலே பொல்லாப்புவராது மனத்தாபம்நீங்கும் உத்தமம். கூ

ஊக்கமாமொன்றுபத்து மொன்றுவந்துதிக்குமாகில்
க ஆக்கமுண்டாகுநன்மை யடைந்திடுதுயரந்தீரும்
௩ பாக்கியமனைத்துமுண்டாம் பற்பலதுயரந்தீரும்
௩ போக்கியபொருளுஞ்சேரும் போனதோர்படையும்வெல்லும்.

(எ-து.) க-௩-௩-ஆனால் புண்ணியங்களுண்டாம் நன்மையுண்டாம் சலிப்புத்தீரும் உபாயங்களுண்டாம் பலபொருள் கைகூடும் போன உடைமைவரும் படைவெல்லும் உத்தமம். ௰-

பகர்ந்திடுமொன்றுபத்து ரெண்டுவந்துதிக்குமாகில்
க இகழ்ந்திடுங்கருமநன்று மீஸ்வரியருளினாலே
௰ புகன்றகாரியம்பலிக்கும் போனவர்சடிதிமீள்வார்
௨ அகன்றவர்சினேகமுண்டு யறியவருறவுமாவர்.

(எ-து.) க-௰-௨-ஆனால் செய்தகாரியம் நன்மையாகும் நினைத்தகாரியங் கைகூடுந் தூரப்போனவர் ஜடிதியில்மீண்டுவருவார் போஜனமுண்டு உத்தமம். ௰க

வண்மையாமொன்றுபத்து நூறுவந்துதிக்குமாகில்
க திண்மையாஞ்சலிப்புமுண்டாஞ் சிந்தித்தகருமந்தீதாங்
௰ கன்மையாங்கடன்வராது கதித்தவெள்ளாமைதீயும்
௱ வெண்மையாஞ்சேவகத்தின் விதமதையறிந்துபாரே.

(எ-து.) க-௰-௱-ஆனால் தொடுத்தகாரியமாகாது நினைத்தகாரியஞ் சலிப்புண்டாகுங் கொடுத்த கடன்வராது வெள்ளாண்மைபலியாது மத்திபம். ௰௨

ஓங்கியஒன்றுநூறு நூறுவந்துதிக்குமாகில்
க தீங்கிலாநன்மைசேருஞ் செப்பியவார்த்தைமேலாம்
௱ பாங்குடனல்லோருண்டாம் பகைவருமுரவேயாவார்
௱ நீங்கினோர்வருவர்வந்தா னிச்சயநன்மைசொல்வார்.

(எ-து.) க-௱-௱-ஆனால் நன்மை மிகவுண்டாம் பகைவருறவாவர் நல்லவிசேஷம் உத்தமம். ௰௩

உன்னியவொன்றுநூறு மொன்றுவந்துதிக்குமாகில்
க பன்னியகருமநன்றும் பலபலவருத்தம்வேண்டாம்
௱ என்னநீமுயன்றதெல்லா மிசையுமேமுசிப்புமில்லை
க வன்னிபோம்மழையுமுண்டாம் வருவரேதூரப்போனோர்.

(எ-து.) க-௱-க-ஆனால் எண்ணியகருமம் நன்று கொடுத்தகாரிய முடியும் நோவுதீரும் அக்கினிபோகும் மழைபெயும் போனவர் வருவார் உத்தமம். ௰௪

உலைவிலாதொன்றுநூறு ரெண்டுவந்துதிக்குமாகில்
க துலைவிலாநன்மைசேருந் துணைவருஞ்சகாயத்தாலே
௱ அசைவிலாத்தெய்வநன்மை யாகுமேகலகந்தீரும்
௨ பசையிலாப்பொருளுஞ்சேரும் பார்ப்பதுதிண்ணந்தானே.

(எ-து) க-௱-உ-ஆனால் அளவில்லாத நன்மைவரும் ஒருவன் சகாயத்தால் வெகுகாரியம் நன்மையுண்டு குலதெய்வத்தினாலே கலகந்தீரும் உத்தமம். ௧௫

உதித்ததோரொன்றுநூறு பத்துவந்துதிக்குமாகில்
க உதித்திடுமாதியத்தன் மூர்த்தியானன்மையாகும்
௱ மதித்ததோர்செட்டுலாபம் பலிக்கும்வெள்ளாண்மையப்பா
௰ கதித்ததோர்சேவகத்தின் கனமதையறிந்துபாரே.

(எ-து.) க-௱-௰-ஆனால் நன்மைவந்தெய்தும் ஆதித்தன் சகாயத்தால் செட்டு வெள்ளாண்மைசேருஞ் சேவகம் முதலானவைசெய்ய நன்று உத்தமம். ௰௬

இரண்டுடனிரண்டிரண்டு கயிற்றினிலிசைக்குமாகில்
உ திரண்டிடுநன்மைநன்றாந் திருவினால்வரமுண்டாகும்
உ வரண்டிடும்புத்திரலாபம் வந்திடும்வாழ்வுண்டாகு
உ முரண்டிடுங்கருமநன்று முனைந்தகோள்தன்னாற்றானே.

(எ-து.) உ-உ-உ-ஆனால் நினைத்தகாரியம்நன்று தெய்வசகாயத்தாலே கேட்டவரந்தரும் பிள்ளையுண்டாம் வருமைதீரும் மனஸ்தாபந்தீருந் தொடுத்தகாரியம் நன்றாம் உத்தமம். ௰௭

ஒல்லையாமிரண்டோடொன்று மொன்றுவந்துதிக்குமாகில்
உ தில்லைநாயகரால்நன்மை சேர்ந்திடுநினைந்ததெல்லாம்
க சொல்லவேபலனுமுண்டு தொடர்ந்ததோர்துயரந்தீரும்
க நல்லதோர்செட்டுமுண்டாம் நன்னிலம்விளைவுமாமே.

(எ-து.) உ-க-க-ஆனால் சுவாமி திருவுளத்தினால் நன்மைவரும் நீ நினைத்தகாரியஞ் சீக்கிரத்தில்கைகூடும் பலனுண்டு அனேக நன்மை உத்தமம். ௰௮

கருதியவிரண்டோடொன்று விரண்டுவந்துதிக்குமாகில்
உ மருவியகருமமெல்லா மத்திபம்நினைத்ததெல்லாம்
க அருமையாமுயலவேண்டா மடுத்தவர்வருவாரானால்
உ பெருகியவிழவுஞ்சொல்வார் பிறந்திடுஞ்சலிப்புதானே.

(எ-து.) உ-க-உ-ஆனால் நீ நினைத்தகாரியமழிந்துபோம் ஒருகாரியமுஞ் செய்யவேண்டாம் அடுத்தவன் இழவுசொல்வான் மனதுக்கம் வரும் மத்திபம். ௰௯

இணங்கியவிரண்டுவொன்று பத்துவந்துதிக்குமாகில்
உ குணங்குசேர்செய்வாய் கேதுகோளுடன்பிணியுந்தீதாம்
க வணங்கியமறைவல்லோர்க்கு வழங்குவைதானமெல்லாம்
௰ பிணங்குமக்கருமமெல்லாம் பிணக்கொடுமுடியுந்தீதாம்.

(எ-து.) உ-க-ய-ஆனால் நாஞ்விதவிரோதமுண்டு தானதர்மஞ்செய்யத் தோஷந்தீருந் தொடுத்தகருமமாகா மத்திபம். உய

மூர்க்கமாயிரண்டோடொன்று நூறும்வந்துதிக்குமாகில்
உ தீர்க்கமாயழிந்துபோகுந் தீவினைமேலுமுண்டாம்
க மார்க்கமாய்வருவதெல்லாம் வலியதோரினைடவூருலே
ய தீர்க்கமாய்முடியுமென்று திரமையாய்ச்சொல்லுவாயே.

(எ-து.) உ-க-ய-ஆனால் மிகவுங் குறைச்சல்வரும் போகிறகாரியமாகாது யார்பொல்லாப்புபேசினாலும் பொறுக்கவேணும் வெகுகஷ்டகாலம் மத்திபம். உக

உறையவேவிரண்டிரண்டு வொன்றுவந்துதிக்குமாகில்
உ இறையவனருளினாலே யியம்பிடுநன்மையென்று
உ குறைவிலாநன்மைகூடுங் குறித்தவர்வரவுமுண்டு
க நிறைபெரும்பகையும்வெல்லும் நினைத்தகாரியமுநன்றே.

(எ-து.) உ-உ-க-ஆனால் இன்னிமித்தம் நன்மையுண்டு நீ நினைத்தவர் வருவார் படைவெல்லும் போனபொருள் கைகூடும். உஉ

பண்ணியகயிற்றில் ரெண்டுடன்பத்துமாகில்
உ மண்ணுளகந்தவிஷ்ணு மாயவனருளினாலே
உ புண்ணியவசத்தாலே பிராணனுக்கச்சமில்லை
ய நண்ணியபேர்களாலே நன்மையுமகிழ்ச்சியுண்டு.

(எ-து.) உ-உ-ய-ஆனால் நன்மையுண்டு போனகாரியம் பலிக்கும் அன்னியபேர்களாலே வெகுசந்தோஷமுண்டு மகாவிஷ்ணுவினருளினால் நன்மையுண்டு உத்தமம். உரு

கொண்டதோர்கயிற்றிரண்டு விண்டுடனாறுகூடில்
உ கண்டுநீநம்மைக்கேட்ட காரியமிகவுநன்று
உ விண்டுவின்றருளினாலே விவாகமுமுடியுங்கண்டீர்
ய எண்டிசைகுடியுமேறு மினிவிறைதெளிக்கநன்றே.

(எ-து.) உ-உ-ய-ஆனால் கேட்டகாரியம் நன்மையாம் மனதிலெண்ணிபகாரியங் கைகூடும் பெண்கொள்ளநன்று ஊர்குடியேறும்பயிரிட்டால் பலிக்கும் உத்தமம். உச

சொல்லிடுமிரண்டுபத்து பத்துவந்துதிக்குமாகில்
உ அல்லாய்த்தீதேயாகும் அடித்தவர்பகையுமாவார்
ய மெல்லியரளொருத்தியாலே விரையமுநோயுமுண்டு
ய வல்லவருடனேநீயும் வாதுசெய்யாதேமேலும்.

(எ-து.) உ-ம-ம-ஆனால் தொடுத்தகாரியந் தூரப்போம் அடுத்தவர் பொல்லாப்புவரும் வியாதிவரும் அதமம். உரு

பேசியரெண்டுபத்து மொன்றுவந்துதிக்குமாகில்
உ மாசொடுதொடுத்ததெல்லாம் யடிபிடிசண்டையாகும்
ம ஆசொடுபோனதெல்லா மாயசுபிராணஹீனம்
க தேசுறுதானஞ்செய்தால் சிலபலந்தீருமன்றே.

எ-து. உ கo க ஆனால் தொடுத்தகாரியத்தில் சண்டையுண்டாம் அந்தச் சண்டை போனால் பிராண சேதம் வரும் தானம் பண்ணவும் அதமம். உசா

உன்னியரெண்டுபத்து நாறுவந்துதிக்குமாகில்
உ இன்னிமித்தங்கணன்று மெடுத்தகாரியங்களெல்லாம்
ம முன்னமேசேரும்வந்து நோவுகான்தீருமப்பால்
ந பண்ணியதெய்வத்தாலே பலித்திடுங்கருமனன்றே.

(எ-து.) உ கo ந ஆனால் நீ கேட்டகாரியம் நன்று ஒருத்தரால் தீரும் தெய்வத்தாலே காரியம் நன்மை உத்தமம். உஎ

சாடியவிரண்டுபத்து ரெண்டுவந்துதிக்குமாகில்
உ கூடியநன்மையுண்டாம் குறித்தகாரியமுநன்றும்
ம ஈடியதனமுமெல்லா மிலாபயாத்திரையினன்று
உ நீடியவோலைப்போகும் நீடுவெள்ளாண்மை நன்றே.

(எ-து.) உ கo உ ஆனால் குறித்தகாரியங்கைகூடும் திரவியஞ்சேரும் ஊர்வழிபோகநன்று வெள்ளாண்மைசேரும் உத்தமம். உஅ

உன்னியரெண்டுபத்து நாறுவந்துதிக்குமாகில்
உ இன்னிமித்தங்கணன்று மிறையவனுமேயெல்லாம்
ம பண்ணியதெய்வத்தாலே பலித்திடுங்கருமமெல்லாம்
ந நன்னயந்தானேயாகு நலம்பெறநினைத்ததெல்லாம்.

(எ-து.) உ ம ந ஆனால் நினைத்த காரியம் நன்மை சாவில்லை கேளும் பகையும் தீரும் பிள்ளைப்பேருண்டு உத்தமம். உகூ

செப்பியவிரண்டுநாறு நாறுவந்துதிக்குமாகில்
உ இப்பொருள்மறையோர்தானு முளத்தினினைத்ததெல்லாம்
ந தப்பிலாநன்மையாகுந் தாழவில்லைபிள்ளைபேறும்
ந துப்பிலாவெதிரிசாவான் தூதுவந்தவருஞ்சேர்வார்.

2

எ-து. ௨ ௩ ௩ ஆனால் நினைத்தகாரியம் நன்மை பிள்ளைபிறக்கும் எதிரிசாவான் கோள்குண்டுணி கலகக்காரன் கலகக்காரி எதிரிசாவான் நன்மையாக வருபவன் வருவான் உத்தமம். ௫0

சேர்ந்திடுமிரண்டுநூறு மொன்றுவந்துதிக்குமாகில்
௨ நேர்ந்திடுந்தர்மரைப்போ னிலையதுபொருந்திவாழும்
௩ ஆர்ந்திடுமீண்டுவந்து வரசதுபோலவென்றும்
௧ தீர்ந்திடுந்துன்பமெல்லாந் திருவும்வந்தினமுஞ்சேரும்.

எ-து. ௨ ௩ ௧ ஆனால் தர்மபுத்திரர் வனவாசம்போய் வருத்தம் தீர்ந்து பட்டாபிஷேகஞ்செய்து செல்வமடைந்தது உத்தமம். ௫௧

தூங்காமலிரண்டுநூறு மிரண்டுவந்துதிக்குமாகில்
௨ பாங்காகநம்மைவந்து கேட்டது சுகமேயாகும்
௩ சாங்காலமினிமேலில்லை சகலசம்பத்துண்டாகும்
௨ ஆங்காலமருளினாலே யல்லலுந்தீருநன்றே.

எ-து. ௨ ௩ ௨ ஆனால் இன்னிமித்தம் நீகேட்டகாரியம் நன்மை வினைகள்வந்து தீரும் வெகுசம்பத்துண்டாகும் தெய்வசகாயமுண்டு அலைச்சலில்லை உத்தமம். ௫௨

மணிக்கயிறிரண்டுநூறு பத்துவந்து திக்குமாகில்
௨ குணித்தகாரியங்கள்தீதாம் கூறிடுங்காளிகுற்றம்
௩ பணித்திடநினைத்ததெல்லாம் படியாதுநிந்தையாகும்
௰ துணித்திடுங்கருவியாலே துக்கமாமுடலினுள்ளே.

எ-து. ௨ ௩ ௧0 ஆனால் நினைத்த காரியங்கூடாது துர்க்கைகுற்றமுண்டு மனதில் வினையுண்டு உடலில் தீவினையுண்டு மத்திபம். ௫௫

பசையொடுபத்துபத்து பத்துவந்துதிக்குமாகில்
௰ நசையொடுவாடுமாடு நன்மனைமக்களாகும்
௰ திசையொடுதெய்வநாதன் றிருவருளாலேவாழும்
௰ வசையொடுவருவதில்லை வறுமைகள் தீருமன்றே.

(எ-து.) ௧0 ௧0 ௧0 ஆனால் ஆசையோடு ஆடும்மாடும்மனைவியும் மக்களும்தெய்வநாயகனருளால் உண்டாம் லட்சுமிகடாக்ஷ முண்டாம் வறுமை நீங்கும் உத்தமம். ௫௪

பத்தொடுபத்துமொன்று பரிவுடமுதிக்குமாகில்
௰ எத்திசைதீமையாகு மெதிரிகள்பயமேயாகும்
௰ உத்தியாய்ச்சொல்வேன்சேரு வொண்டொடிகலகமுண்டு
௧ பத்தியாய்தேசம்போனூர் பண்புடன்மீளாராமே.

(எ-து.) ௧0 ௧0 ௧ ஆனால் இந்நிமித்தம் நினைத்தகாரியமாகாது எந்ததிக்கிலும் எதிரிகளால் பயமும் கலகமுமுண்டு தேசம்போனார் வாரார்மத்திபம். (௩௫)

மருவொடுபத்துபத்து மிரண்டுவந்துதிக்குமாகில்
௰ திருவொடுநன்மையாகும் தினமுநன்மழையேபெய்யும்
௰ குருவொடுசீட்டனாகுங் கூறுமாண்பிள்ளையாகும்
௨ செருவொடுசெயமுண்டாகுஞ் செட்டுவாணிபமுமுண்டே.

(எ-து.) ௧0 ௧0 ௨ ஆனால் நினைத்தகாரியம் நன்மை மழையுண்டு ஆண்பிள்ளைபெருவாள் படைவெல்லும் செட்டுபலிக்கும் உத்தமம். ()

பத்தியாய்ப்பத்துபத்து நாறுவந்துதிக்குமாகில்
௰ உத்தியாய்க்கெடுதிகாணு முருக்கியேநோவுந்தீரும்
௰ முத்தியசோகந்தீரும் முகூர்த்தமுநன்மையாகும்
௩ சித்தியாந்துயரந்தீரும் தீராநோய் தீருந்தானே.

(எ-து.) ௧0 ௧0 ௩ ஆனால் இந்நிமித்தம் கெடுதிகாணும் மனஸ்தாபந்தீரும் முகூர்த்தமாகும் நோவுதீரும் உத்தமம். (௩௭)

சொன்னதோர்பத்துமென்று மிரண்டுவந்துதிக்குமாகில்
௰ மன்னவன்மாயனாலே மகிழ்ந்திடுங்கருமமெல்லாம்
௧ மின்னியமழையுமுண்டு வீடுதானெடுக்கனன்று
௨ கன்னியைக்கொள்ளநன்று காரியமெல்லாநன்றே.

(எ-து.) ௧0 ௧ ௨ ஆனால் நீ நினைத்தகாரியம் அரசனாலும்விஷ்ணுவாலும்பலிக்கும் மழையுண்டு வீடுகட்டனன்று பெண்கொள்ள நன்று உத்தமம். (௩௮)

பையவேபத்துமொன்று மிரண்டுவந்துதிக்குமாகில்
௰ ஐயமேகருமமெல்லா மகமகிழ்ச்சியுமேயில்லை
௧ மெய்பிலேவியாதியுண்டு மேன்மையாய்ப்பார்க்கவேணும்
௨ செய்வதுசெய்யவேண்டும் செயமில்லைகருமந்தீதே.

(எ-து.) ௯௦ ௧ ௨ ஆனல் நினைத்தகரும மழிந்துப்போம் உடம்பில் வியாதிதோன்றும் செய்யவேண்டிய கருமஞ்செய்யவேண்டுஞ்செயமில்லை காரியக்கோடா மத்திபம். (௩௯)

பற்றிலாப்பத்தோடொன்று பத்துவந்துதிக்குமாகில்
வ முற்றிலாபங்களுண்டாம் முன்னேமுதலாநிற்பான்
௧ பற்றிலாதவரும்வந்து பரமனைவணங்கிநிற்பாற்
வ கற்றிலாதவருமாவார் காரியமெல்லாநன்றே.

(எ-து.) வ வ வ ஆனல் காரியங்கைகூடும் இலாபமுண்டாம் கடவுள் முந்நிற்பார் கல்விலாபம் காரியமெல்லாம் நன்று உத்தமம். ()

அடுத்ததோர்பத்துமொன்று நாறுவந்துதிக்குமாகில்
வ எடுத்தநற்கருமமாகு மீஸ்வரியருளினலே
௧ தொடுத்தகாரியங்கணன்று துணிந்திடில்வழக்குவெல்லும்
ா அடுத்தநற்பொருள்வந்தெய்து மவையெட்டு நாளிற்றனே.

(எ-து.) வ ௧ ா ஆனல் ஈஸ்வரி கடாட்சத்தால் இன்னிமித்தம் நன்மை வழக்குவெல்லும் கேட்டபொருள் எட்டுநாளில் கைகூடும் உத்தமம். (௪௧)

கூறியபத்திரண்டு விரண்டுவந்துதிக்குமாகில்
வ வீறியநன்மையாகும் விதித்தகாரியமுமாகும்
௨ சீறியகருமமெல்லாஞ் செம்மையாய்வந்துசேரும்
௨ ஏறியவாகனங்க ளெய்துமென்றுரைப்பாய்தானே.

(எ-து.) வ ௨ ௨ ஆனல் இந்நிமித்தம் நீர்கேட்டகாரியமாகும் கொபந்தணியும் வாகனமுண்டாம் உத்தமம். (௪௨)

பற்றுறுபத்திரண்டு வொன்றுவந்துதிக்குமாகில்
வ வெற்றியாந்தொடுத்ததெல்லாம் விவாகமும்செய்யநன்று
௨ குற்றமில்லான்சகாயங் கூடிடுமிடையூறில்லை
௧ உற்றவேளாண்மைசெட்டு வுறமுறைவழிபோக்காமே.

(எ-து.) வ ௨ ௧ ஆனல் இன்னிமித்தம் நன்று விவாகம்பண்ண நன்று இடையூறில்லைவெற்றியாம் வேளாண்மை வியாபாரம்பலிக்கும் பந்துக்களும் பிரயாணமும் உத்தமம். (௪௩)

அடங்கவேபத்திரண்டு பத்துவந்துதிக்குமாகில்
௰ தடங்கவேவழக்குவெல்லுஞ் சூதுகள்வாதுவெல்லும்
உ தடங்குள்மேறிவெட்ட சாலவேமிகவுநன்று
௰ இடங்களில்மறைவல்லோர்க்கே யீகுவாய்தானந்தானே.

(எ-து.) க0 உ க0 ஆனல் இன்னிமித்தம் நீர்கேட்ட காரியம் செலிக்கும் வழக்குவெல்லும் ஏரிகுளம் வெட்டநன்று வேதமுணர்ந்தோர்க்குத் தானஞ் செய்யவேண்டும் உத்தமம். ௪௪

குறைவிலாப்பத்திரண்டு நூறுவந் துதிக்குமாகில்
௰ பொறைமகளருளினலே போனதுநோடமெல்லாம்
உ சிறைபயமினிமேலில்லை சீவனமுடனேயாகும்
௱ நிறையவேதவசுநிற்கும் நிறைசெல்வமுடனேசேரும்.

(எ-து.) க0 உ ௱ ஆனல் இன்னிமித்தம்தேகத்தில்துக்கந்தீர்ந்து சிறைநீங்கும் பயனில்லை சீவனமும் பொருள்சேரும் தானியம் பெருகும் உத்தமம். ௪௫

உருமையாம்பத்துநூது மொன்றுவந்துதிக்குமாகில்
௰ கருமையால்விவாகஞ்சேரும் காணும்வேளாண்மையாகும்
௱ அருமையாயாடுமாடு வடிமைகொண்டிடவுநன்று
க பெருமையாய்ப்படையும்வெல்லும் பேசியவூருநன்றே.

(எ-து.) க0 ௱ க ஆனல் நீர் நம்மை வினவிக்கேட்டகாரியம் நன்மை விவாகம் கைகூடும் ஆடுமாடு அடிமைகொள்ளநன்று ஊருக்குப்போக நன்று உத்தமம். ௪௬

இசையவேபத்துநூறு விரண்டுதானுதிக்குமாகில்
௰ வசையவேசதியுஞ்சேரு வருவதுதீதோயாகும்
௱ விசையமேலில்லைதெய்வம் விருதாவில்போவதாகும்
உ நசையவேசொன்னேமிந்த நாள்முதலெல்லாந்தீதே.

(எ-து.) க0 ௱ உ. ஆனல் நீர்நினைத்தகாரியம் ஆகாது சத்துருவுண்டு தெய்வபலனில்லை எந்தகாரியமும் பலியாது மத்திபம். ௪௭

ஓதியபத்துநூறு பத்துவந்துதிக்குமாகில்
௰ நீதியாய்க்கேட்டதெல்லாம் நிமிஷத்தில்கூடுந்தானே

௱ வாதனைப்படவேவேண்டாம் வருவதுதானேசேரும்
௰ ஆதியானருளினாலே அரியனவெல்லாந்தானே.

(எ-து.) ௰ ௱ ௰ ஆனால் இன்னிமித்தம் நீ ஆசரித்த தெய்வத்தினா லே தொடுத்தகாரியம் பலிக்கும் வருத்தப்படவேண்டாம் வருவது தானேவரு உத்தமம். (௪௮)

நயந்துடன்பத்துநூறு நூறுவந்துதிக்குமாகில்
௰ வியந்துநீகேட்டதெல்லாம் விருதாவில்தானேயாகும்
௱ பயந்துநீசெய்ததொல்லாம் பகையாகுபழிபெண்சாதி
௲ அயந்துநீகேட்டதெல்லாம் மாகாதென்றமையுந்தானே.

(எ-து) ௰ ௱ ௲ ஆனால் நீ நினைத்தகாரிய மாகாது பெண்சாதியா லே இடையூறுண்டு நீகேட்டது முடியாது மத்திபம். (௪௯)

ஓங்கியநூறுமொன்று மொன்றுவந்துதிக்குமாகில்
௱ வாங்கியமனைபுந்தீதாம் வாழ்மனைதெய்வநீங்கும்
க ஏங்கியபகைவராலே எல்லாதீமையுமுண்டாகும்
க பாங்குடனீர்வந்தெப்தும் பகருவோரமஃகமாமே.

(எ-து.) ௱ க க ஆனால் நினைத்தமனையினாற் றீதாகும் குலதெய்வ நீங்கும் வெள்ளம்பெருகும் அகவிலைகுறையும் மத்திபம். ௫௰

திருந்தியநூறுமொன்று பத்துவந்துதிக்குமாகில்
௱ வருந்தியலாபநன்றும் மண்ணளந்தவனுன்மை
க பொருந்தியதெல்லாநன்று புகன்றகாரியமுநன்று
௰ விருந்ததுவந்துதோன்றும் விசையமே படையில்தானே.

(எ-து.) ௱ க ௰ ஆனால் செட்டுலாபமுண்டு மகாவிஷ்ணுவால் நன்மையுண்டு நினைத்தகாரியங்கைகூடும் ஒருவிருந்துவரும்படை வெ ல்லும் உத்தமம். ௫௧

நின்றதோர்நூறுமொன்று மிரண்டுவந்துதிக்குமாகில்
௱ நன்றெனவுகுறிக்கவேண்டும் நாதனாருளினாலே
க என்றுமேவெற்றிசேரும் எதிர்த்ததோர்வியாதிதீரும்
உ சென்றிடும்பயணந்தன்னில் சேர்ந்திடும்பொருளுந்தானே

(எ-து.) ௱ க உ ஆனால் நினைத்தகாரியம் நன்மைவெற்றிசேரும் வியாதிபோய்பொருளுண்டாம்வேண்டியதெல்லாமுண்டாம்உத்தமம்

தேக்கியநூறுமொன்று நூறுவந்துதிக்குமாகில்
௩ ஆக்கியகருமமெல்லா மருந்திடுமிடையூறுண்டாம்
௧ பாக்கியம்பறந்துபோகும் பற்றலர்மிகுதியாவார்
௩ யோக்கியமெல்லாம்போமே யொள்ளியவறிவுளோரே.

(எ-து.) ௩ ௧ ௩ ஆனால் செய்தகாரியமழிந்துபோகும் இடையூறுண்டு அயிஸ்வரியம்போம் பிராணசேதமுண்டு மத்திபம். ௫௩

நலந்தருநூறிரண்டு மொன்றுவந்துதிக்குமாகில்
௩ வலந்தருநன்மையெல்லாம் வந்தகாரியம்பலிக்கும்
௨ நிலந்தனிலிடுக்கண்போகும் நீடியபொருளுமுண்டு
௧ குலந்தனிநன்மையுண்டு குறித்ததோர் பொருளுமுண்டே.

(எ-து.) ௩ ௨ ௧ ஆனால் நீ வந்தகாரியம் பலிக்கும் வருத்தந்தீரும் பொருளுண்டு குலத்தில் நன்மையுண்டு நினைத்தகாரியமாகும் உத்தமம்.

நயந்திடுநூறிரண்டு மிரண்டுவந்துதிக்குமாகில்
௩ வியந்திடுநன்மைசேரும் வெற்றியும்புகழுமுண்டாம்
௨ உயர்ந்தவனொருவனாலே உறவுண்டுநன்மையுண்டு
௨ பயந்தவிர்ந்திடுவாயிப்போ பாலும்வெள்ளாண்மையாமே.

(எ-து.) ௩ ௨ ௨ ஆனால் இந்நிமித்தம் நினைத்தகாரியஞ்செயம் கீர்த்தியும் புகழுமுண்டாம் ஒரு பெரியவராலே நன்மை யுண்டு பயமில்லை செட்டு வேளாண்மை பலிக்கும் உத்தமம். ௫௫

போற்றியநூறுபத்து பத்துவந்துதிக்குமாகில்
௩ ஏற்றியகருமமெல்லா மிசையவே நன்மையுண்டு
௰ சாற்றியபகையும்நீங்குஞ் சத்தியமிதுதானப்பா
௰ மாற்றியபகைவர்போவார் மாயவனருளாற்றனே.

(எ-து.) ௩ ௧௦ ௧௦ ஆனால் நினைத்காரியம் பலிக்கும் பகைபோகுஞ் சத்தியமிது மகாவிஷ்ணுவினாலே பகைவர்மாள்வார் உத்தமம்.

வாசமாம்நூறிரண்டு பத்துவந்துதிக்குமாகில்
௩ வாசவனருளினாலே வல்லிடையூறுநீங்கும்
௨ நேசமாவொருவனாலே நியமங்கடானுமுண்டு
௰ நாசமாஞ்சருவதோட நம்புவாய்சொன்னவாரே

(எ-து.) ௩ ௨ ௪ ஆனால் நினைத்தகாரியம் நன்மை இடையூறில்லை ஒருவனாற் சிநேகமுண்டு தோஷம்போம் உத்தமம். ௫௭

நன்னயநூறிரண்டு நூறுவந்துதிக்குமாகில்
௩ இன்னிமித்தம்நீர்கேட்ட தெல்லாந்தான்பலிக்குமேலும்
௨ முன்னியபடையும்வெல்லுந் தூரத்தோர்சேதிசேரும்
௩ பொன்னியல்பொருளுமுண்டாம் பொல்லாப்புதீருந்தானே

(எ-து.) ௩ ௨ ௩ ஆனால் கேட்டகாரியம்பலிக்கும் படைவெல்லும் தூரப்போனவர் வருவார் பொல்லாப்பு தீரும் உத்தமம். ௫௮

செப்பவேநூறுபத்து மொன்றுவந்துதிக்குமாகில்
௩ அய்யவேநீருநன்மை யடிமைகொள்ளவுமேநன்மை
௪ தையலாலொருத்தியாலே சகாயமொன்றுண்டுமுன்னம்
௧ பையவேகருமமெல்லாம் பலித்திடும்பரிட்சைபாரே.

(எ-து.) ௩ ௧௦ ௧ ஆனால் இன்னிமித்தம் கேட்டகாரியம்பலிக்கும் பெண்ணால் சகாயமுண்டு பரிட்சை பார்க்கலாம் உத்தமம். ௫௯

குலாவியநூறுபத்து விரண்டுவந்துதிக்குமாகில்
௩ சலாமிதுசாமிகாரியந் தவிறாதுமுன்னாள்முடியும்
௪ நிலாவியகருமங்கூடும் நீடியதுயரம்போகுங்
௨ குலாவியபுருவத்தாளே குலதெய்வங்குணமும்போமே.

(எ-து.) ௩ ௧௦ ௨ ஆனால் நீகேட்டகாரியமாகையால் சாமிகாரியந்தவராது பழையகாரியமுடியும் துயரம் நீங்கும்குலதெய்வசந்தோஷமுண்டு உத்தமம். ௬௦

காணவேநூறுபத்து நூறுவந்துதிக்குமாகில்
௩ மாணவேநன்மைசேரும் மதித்தகாரியமுநன்றும்
௪ பேணவேசிறையுமில்லை பேருளபிள்ளையாகும்
௩ தோணவேநன்மையுண்டாம் துரைகள்தன்பேடியாமே.

(எ-து.) ௩ ௪ ௩ ஆனால் நினைத்தகாரியம் நன்மை பகையில்லை பிள்ளை பிறக்கும் துரைகள் தெரிசனமாம் உத்தமம். ௬௧

மதித்திடும் நூறுநூறு நூறுவந்துதிக்குமாகில்
௩ விதித்திடுநன்மைசேரும் வெற்றியும்படையுமுண்டாம்
௩ உதித்திடுபகைவர்தானு முடனுறலாகுவாரே
௩ மதித்திடும்பெரியோராலே மங்களமிகவுமாமே.

(எ-து) ௩-௩-௩-ஆனால் கேட்டகாரியம் நன்மைபட சேரும் வெற்றியுண்டாம் பகைவர் உறவாவர் பெரியோராலே மங்களமுண்டாம்.

நின்றது நூறு நூறு பத்துவந்திருக்குமாகில
௩ அன்றவர்நினைத்ததெல்லா மரனருளாலே சேரும்
௩ இன்றொருகலகமில்லை யினியொருதீமையில்லை
௪ நன்றதுசொன்னோமிந்த நானிலத்தோர்க்குத்தானே.

(எ-து) ௩-௩-௪-ஆனால நினைத்தகாரியம் அரனாலே கைகூடும் ஒரு நீங்கில்லை உத்தமம். ௬௩

வல்லதோர் நூறு நூறு மொன்றுவந்திருக்குமாகில்
௩ நல்லதோர்கருமமுண்டு நாடியதெல்லாங்கூடும்
௩ அல்லதுந்திருகுநல்ல வரியதோர்பொருளுங்கூடும்
௧ வெல்லுவம்பகைவர் தம்மைவேளாண்மைமிகவுண்டாமே.

(எ-து) ௩-௩-௧-ஆனால் கேட்டகாரியம் நன்று துன்பம் தீரும் இன்பம்வரும் சத்துருசெயமும் வேளாண்மையுமுண்டாம் உத்தமம்.

கண்டதோர் நூறு நூறு மிரண்டுவந்திருக்குமாகில்
௩ கொண்டதோர்தெய்வத்தாலே குறைவிலாசெல்வமுண்டு
௩ மண்டலம்மெச்சவாழ்வாய் வந்திடுமாளச்செல்வம
௨ புண்டரீகத்திருதே பொருந்தியபுகழுமுண்டாமே.

(எ-து) ௩-௩-௨-ஆனால் தனக்கு வேண்டிய தெல்லாம் தெய்வத்தாலேவரும் அனேக செல்வம் வரும் பிரமனால் ஆயுளுண்டாம உத்தமம். ௬௫

## சந்தனக்குரவென்கிற

## நிமித்த சூடாமணி

முற்றிற்று: ஆக பாட்டு-௬௫.

நிமித்தமென்பது-காரணம்.

உத்தமம்-மத்திமம்-அதமம்-என்னு மூன்றில் உத்தமம் நன்மை மத்திமமும் அதமமும் தீமை இதை முக்கியமா யறிய வேண்டும்.

.3

உ

கடவுள் துணை.

# ஸ்ரீ ராமச்சக்கரம்.



இந்த ஸ்ரீராமச் சக்கிரத்தில் ஸ்ரீராமமூர்த்தியை மனதில்தியானித்து ஒரு பஷ்பத்தை யெடுத்து இந்தச் சக்கிரத்தி லிருக்கும் எண் ஒன்றைத் தொடவும் அதனால் நன்மையோ தீமையோ வென்னும் பலாபலன் ஸ்ரீராமச்சக்கர பலாபலனில் பார்க்கவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 |

## ஸ்ரீராமச்சக்கரபலாபலன்.



௧-வது-ஸ்ரீராமர்கிருபையால் நினைத்தகாரியங்கைகூடும்
௨-வது-ராமர்கிருபையால் நினைத்தகாரியம்மாயாசம்வேண்டாம்
௩-வது-ராமர்கிருபையால் நினைத்தகாரியசத்துக்கள்பலர்பனம்
௪-வது-ராமர்கிருபையால் நினைத்தகாரியம்துன்பம்வரும்
௫-வது-ராமர்கிருபையால் நினைத்தகாரியர்துன்பநீங்கிபோகும்
௬-வது-ராமர்கிருபையால் நினைத்தகாரியபகெடுதியுண்டாம்
௭-வது-ராமர்கிருபையால் நினைத்தகாரியமனதுக்கு துன்பம்வராது
௮-வது-ராமர்கிருபையால் நினைத்தகாரியம்ஜெயமுண்டாம்

## சகாதேவசாஸ்திர இலக்க விளக்கம்.

☞ தன் முன் னின்றோனை நோக்கி நூற்றெட்டில் குறைய மூன்றுதிரங்கேட்டு சொன்ன தொகையை 8-ற் கழித்து மிச்சத்திற்கு அந்த வரியைப் பார்த்தால் பலாபலன் தெரியவரும் மிச்சமிராவிடில் முதல்வரியைப் பார்த்து பலனறிய வேண்டுமென்பது இச் சகாதேவ சாஸ்திரத்தின் சித்தாந்தம்.



ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# தலைப்பெயர் அட்டவணை.



தலைப்பெயர் அட்டவணை

முற்றுப்பெற்றது.





கடவுள் துணை.

# சகாதேவ சாஸ்திரம்.

விநாயகர்-காப்பு-விருத்தம்.

தகாதகாரியந் தன்னைவிலக்கவும்
புகாதவேலை புகுந்துநிலைநிற்கச்
சகாதேவன்கலை சாற்றத்துணைசெய
மகாதேவன்சுதன் மன்னுவானென்னுளே

க. விநாயகக்கடவுளை பூசிக்கநன்றேதீதோ.

க-விநாயகக்கடவுளை பூசிக்கமிகநன்று
உ-விநாயகரைபூசிக்க மத்திபம்
ங-விநாயகரைப்பணிய சம்பத்துண்டாம்
ச-விநாயகரைப்பணிய பிணிதீரும்
ரு-விநாயகரைப்பணிய ராஜதரிசனமுண்டாம்
சு-விநாயகரைச்சிந்திக்க மத்திபம்
எ-விநாயகரைப்போற்றினும் துன்பம்நீங்காவாம்
அ-விநாயகரைச்சிந்தித்தால் ஜயமடைவார்.

உ. சண்முகனைப் பூசிக்க நன்றேதீதோ.

க-சண்முகனைப்பூசிக்க நன்மையுண்டாம்
உ-சண்முகனைப்பூசிக்க மத்திபம்
ங-சண்முகனைப்பணிய சம்பத்துஉண்டாம்
ச-சண்முகனைப்பணிய சத்துருபயம்நீங்கும்
ரு-சண்முகனைப்பணிய வெற்றியுண்டாம்
சு-சண்முகனைப்பணிய நினைத்தகாரியங்கைகூடும்

எ-சண்முகனைப்பணிய மத்திபம்
அ-சண்முகனைப்போற்றில் சகலகர்மம்நீங்கும்

### ௩. சிவபெருமானைப்பூசிக்க நன்றோ தீதோ

க-சிவபெருமானைப்பூசிக்க நன்மையுண்டாம்
உ-சிவபெருமானைப்பணிய பிணியுண்டாம்
௩-சிவபெருமானைப்போற்ற பலநோயகலும்
௪-சிவபெருமானைப்போற்ற செல்வமுண்டாம்
௫-சிவபெருமானைப்போற்ற தனங்குறையும்
௬-சிவபெருமானைப்போற்ற மத்திபமாம்
எ-சிவபெருமானைப்பணிபவர் திரவியம்சேரும்
அ-சிவபெருமானைப்பணிபவர் சிந்தை துயர்நீங்குவார்.

### ௪. உமாதேவியைபூசிக்க நன்றோ தீதோ.

க-உமாதேவியைப்பூசிக்க நன்மையுண்டாம்
உ-உமாதேவியைப்பணிய மத்திபமாம்
௩-உமாதேவியைப்பணிய சகலபீடைநிவர்த்தியாம்
௪-உமாதேவியைப்போற்ற கலிதீரும்
௫-உமையவளைபோற்ற நினைத்தகாரியங்கைகூடும்
௬-உமாதேவியைச்சிந்தித்தால் துயர்உண்டாம்
எ-உமாதேவியைப்பணிய குறைவில்லாதிருப்பார்
அ-உமாதேவியைப்பணிபவர் ஓங்கும்செல்வமுடையாவார்

### ௫. விஷ்ணுவைப்பூசிக்க நன்றோ தீதோ.

க-விஷ்ணுவைப் பூசிக்கலாம்
உ-விஷ்ணுவைப்பணிய தேஜசுஉண்டாம்
௩-விஷ்ணுவைப்பணிய சகலசம்பத்துண்டாம்
௪-விஷ்ணுவைப்போற்ற வினை தீரும்
௫-விஷ்ணுவைப்போற்ற ஜயமுண்டாம்
௬-விஷ்ணுவைப்பணியிலும் குறைநீங்காலாம்
எ-விஷ்ணுவைப்பணிந்தவர் விவேகவிர்த்தியாவார்
அ-விஷ்ணுவைப்பணிந்தால் வேந்தராவார்.

## கூ. இலக்குமியைப்பூசிக்க நன்றுதீதோ.

க-இலக்குமியைப்பூசிக்க நலமாம்
உ-இலக்குமியைப்பணிய ராஜனுவார்
ங-இலக்குமியைப்பூசிக்க மத்திமம்
ச-இலக்குமியைப்பணிய சகலநேசமும்உண்டாம்
ரு-இலக்குமியைப்பணிந்தால் நேசவிரோதமாம்
சு-இலக்குமியைப்பணிய என்னுளும்குறைவுபடார்
எ-இலக்குமியைப்பணிய இரக்கமுண்டாம்
அ-இலக்குமியைப்பணிவோர் எல்லாநலமும்பெருவார்.

## எ-கலைமகளைப்பூசிக்க நன்றுதீதோ.

க-கலைகளைப்பூசிக்க நலமாம்
உ-கலைமகளைப்பணிய கல்வியுண்டாம்
ங-கலைமகளைப்பணிந்தால் காரியங்கைகூடும்
ச-கலைமகளைப்பணிந்தால் காரியம்மத்திபமாம்
ரு-கலைமகளைப்பணிய காவலர்நேசமுண்டாம்
சு-கலைமகளைப்பணிந்தால் கவலையுண்டாம்
எ-கலைமகளைப்பணிய கர்மமுண்டாம்
அ-கலைமகளைத்தொழுக் கலைவல்லவராவார்

## அ. அடியார்களைப்பணிய நன்றுதீதோ.

க-அடியார்களைப்பணிய நன்மையுண்டாம்
உ-அடியார்களைப்பணிந்தால் மத்திபமாம்
ங-அடியவரைப்பணிந்தால் ஆபத்துநீங்கும்
ச-அடியவரைப்பணிய ஆயுள்குறையும்
ரு-அடியவற்குதொண்டுசெய்தால் அரசர்ஆவார்
சு-அடியவரைத்தொழுபவர் ஜெயமுண்டாம்
எ-அடியவரைப்பணிந்தால் ஆயுள்விர்த்தியாம்
அ-அடியவர்களைப்பணிந்தால் அன்பர்களாவார்

## கூ. குருவைப்பணிய நன்றுதீதோ.

க-குருவைப்பணிய நலமாம்
உ-குருவைப்பணிய மத்திபமாம்

௩-குருவைப்பணிய வினைதீர்ந்துபுனிதராவார்
௪-குருவைப்பணிந்தால் கோளர்களால்துயரடைவார்
௫-குருவைப்பணிபவர் குலவிர்த்தியடைவார்
௬-குருவைப்பணிந்தால் குறைகளுண்டாகும்
௭-குருவைப்பணிந்தால் கொற்றவராவார்
௮-குருவைப்பணிந்தவர் கோதிலாவாழ்வார்.

௰. சிவாலயம்புதுக்க நன்றோதீதோ.

௧-சிவாலயங்கட்டநலமாம்
உ-சிவாலயங்கட்டினல் செல்வமுண்டாம்
௩-சிவாலயங்கட்டினல் ஜெயமுண்டாம்
௪-சிவாலயங்கட்டினல் சித்திபெறுது
௫-சிவாலயங்கட்டினல் ஜெயம்பெற்றுவாழ்வார்
௬-சிவாலயங்கட்ட செல்வங்களகலும்
௭-சிவாலயங்கட்ட செல்வமுண்டாம்
௮-சிவாலயங்கட்டினல் தேகமெங்கும்புகழ்ச்சிபெருவார்.

௰௧. விஷ்ணுவாலயம்புதுக்க நன்றோதீதோ.

௧-விஷ்ணுவாலயங்கட்ட நலமாம்
உ-விஷ்ணுவாலயம்புதுக்க மத்திமமாம்
௩-விஷ்ணுவாலயங்கட்ட விசேஷநன்மையுண்டாம்
௪-விஷ்ணுவாலயங்கட்ட மேன்மையுண்டாம்
௫-விஷ்ணுவாலயங்கட்ட மேன்மையுண்டாகும்
௬-விஷ்ணுவாலயத்தால் வியாகூலமுண்டாம்
௭-விஷ்ணுவாலயங்கட்டினல் வேணசம்பத்துண்டாம்
௮-விஷ்ணுவாலயங்கட்டினல் மேன்மையையடைவார்.

௰உ. தேர்செய்ய நன்றோதீதோ.

௧-தேர்செய்ய நன்று
உ-தேர்செய்வாராகில் திருவிழாநடவாவாம்
௩-தேர்செய்துவைத்தால் தீமைதெளிப்பார்
௪-தேர்செய்துவைத்தவர் சிந்தனைப்படுவார்

ரு-தேர்செய்துவைத்தால் ஜயங்கொண்டுதிரிவர்
சு-தேர்செய்துவைத்தால் சிந்தனையுண்டாம்
எ-தேர்செய்துவைத்தால் திக்கெல்லாம்புகழ்பெருவார்
அ-தேர்செய்துவைத்தால் செல்வமுற்று இருப்பார்.

யங. திருக்குளம்புதுக்க நன்றோதீதோ.

க-திருக்குளம்புதுக்க நன்று
உ-திருக்குளம்கெல்ல சிந்தனையுண்டாம்
ங-திருக்குளம்கட்ட செல்வமுண்டாகும்
ச-திருக்குளம்கட்ட தீமையுண்டாகும்
ரு-திருக்குளம்கட்டினால் செல்வவிசேஷமாம்
சு-திருக்குளம்வெட்டினால் சீவசேதமுண்டாம்
எ-திருக்குளம்வெட்டினவர்கள் தேசத்தில்புகழ்பெருவார்
அ-திருக்குளம்வைத்தவர் செல்வமோங்கிவாழ்வார்.

யச. உச்சவாதிகள்செய்ய நன்றோதீதோ.

க-உச்சவாதிகள்செய்ய நன்று
உ-உச்சவாதிகள்செய்தால் ஊழ்வினைநீங்கும்
ங-உச்சவாதிகளால் உறவினர்பகையாம்
ச-உச்சவாதிசெய்தால் குற்றவினைநீங்கும்
ரு-உச்சவாதிசெய்தவற்கு உறவினர்பகையுண்டாம்
சு-உச்சவாதிசெய்தவர்களின் ஊழ்வினையகலும்
எ-உச்சவாதிசெய்தால் ஊர்மெச்சவாழ்வார்
அ-உச்சவாதிசெய்பவர் உலகாளும்ராசராவார்

யரு-பூங்காவனம்வைக்க நன்றோதீதோ.

க-பூங்காவனம்வைக்க நன்று
உ-பூங்காவனம்வைத்தால் புத்திரபாக்கியமுண்டாம்
ங-பூங்காவனம்வைத்தவர் பொருளிழந்துழலுவார்
ச-பூங்காவனம்வைத்தவர் உலகத்தில்பூசிதர்எனப்படும்
ரு-பூங்காவனம்வைத்தவர் பிரிதியார்புத்திமயங்குவார்
சு-பூங்காவனம்வைத்தவர் பொன்னுலகாள்வார்
எ-பூங்காவனம்வைத்தவர் பொன்னளித்துழலுவார்
அ-பூங்காவனம்வைத்தவர் அதிகபுகழைப்பெருவார்.

## ௰௬. மடலயம்புதுக்க நன்றோதீதோ.

க-மடாலயம்புதுக்க நன்று
உ-மடாலயம்கட்டினால் மத்திபமுண்டாம்
௩-மடாலயங்கட்டினால் மாட்சிமைப்பெறுவார்
௪-மடாலயங்கட்டினால் மனவருத்தமடைவர்
௫-மடாலயங்கட்டினவர் மக்கள்பேர்பெறுவார்
௬-மடாலயங்கட்டினவர்கள் மரணமடைவார்
௭-மடாலயங்கட்டினவர்கள் சாதுக்களால்மாண்படைவர்
௮-மடாலயங்கட்டினவர் நெடுங்காலம்வாழ்வார்.

## ௰௭. சத்திரங்கட்ட நன்றோதீதோ.

க-சத்திரங்கட்ட நன்று
உ-சத்திரங்கட்டினால் பெரியோரால்சாபமுண்டாம்
௩-சத்திரங்கட்டினால் ஜென்மசாபல்லியமாகும்
௪-சத்திரங்கட்டினால் சந்ததமும்நீங்காச்செல்வராவார்
௫-சத்திரங்கட்டினால் சங்கடப்படுவார்
௬-சத்திரங்கட்டினவர்கள் சம்பத்துஅடைவார்கள்
௭-சத்திரங்கட்டினவர்கள் தனமிழந்துதுன்பப்படுவார்
௮-சத்திரங்கட்டினவர்கள் சகலசம்பத்தடைவார்கள்.

## ௰௮. ஸ்தலயாத்திரைசெய்ய நன்றோதீதோ.

க-ஸ்தலயாத்திரைசெய்ய நன்று
உ-ஸ்தலயாத்திரைசெய்தால்மனதுக்குசலனமுண்டாம்
௩-ஸ்தலயாத்திரைசெய்தால் சந்தோஷமடைவார்
௪-ஸ்தலயாத்திரைசெய்தால் மனதுக்குசங்கடமுண்டாம்
௫-ஸ்தலயாத்திரைசெய்தால் மனதுக்குசந்தோஷமுண்டு
௬-ஸ்தலயாத்திரைசெய்தால் சங்கடப்படுவார்கள்
௭-ஸ்தலயாத்திரைசெய்தால் சந்தோஷமுண்டாகும்
௮-ஸ்தலயாத்திரைசெய்தால் சம்பத்துண்டாகும்.

## ௰௯. தீர்த்தயாத்திரைசெய்ய நன்றோதீதோ.

க-தீர்த்தயாத்திரைசெய்ய நன்று
உ-தீர்த்தயாத்திரைசெய்தால் திருடர்பயமுண்டாம்

௩-தீர்த்தயாத்திரைசெய்தால் செல்வமுண்டாம்
௪-தீர்த்தயாத்திரைசெய்தால் செல்வமகன்றிடும்
௫-தீர்த்தயாத்திரைசெய்தால் செல்வமுண்டாம்
௬-தீர்த்தயாத்திரைசெய்தால் சீவசேதமுண்டாம்
௭-தீர்த்தயாத்திரைசெய்தால் தீங்கன்றுவாழ்வார்
௮-தீர்த்தயாத்திரைசெய்தால் மேன்மையாய்வாழ்வார்.

௨௰-வீடுகட்ட நன்றோதீதோ.

௧-வீடுக்கட்ட நன்று
௨-வீடுகட்டகாற்றினல் வியசனமுண்டாம்
௩-வீடுகட்டகுடியேறில் விருத்தியடைவார்
௪-வீடுகட்டிகுடியேறினல் வியாகூலமடைவார்
௫-வீடுகட்டப்புகுந்தால் புதையல்கிடைத்துவிர்த்தியாவார்
௬-வீடுகட்டினவர் விர்த்தியடையமாட்டார்
௭-வீடுகட்டினவர் மேன்மையடைவார்
௮-வீடுகட்டினவர் மேன்மையாழ்வார்

௨௧. கிருகப்பிரவேசம் நன்றோதீதோ.

௧-கிருகப்பிரவேசம் நன்று
௨-கிருகப்பிரவேசம்செய்தால் கிளைகள்விர்த்தியாகாது
௩-கிருகப்பிரவேசம்செய்தால் காம்பீரமாய்வாழ்வார்
௪-கிருகப்பிரவேசம்செய்தால் உடனேகீர்த்திவொடுங்கும்
௫-கிருகப்பிரவேசம்செய்தால் புத்திரசம்பத்துண்டாம்
௬-கிருகப்பிரவேசம்செய்தால் கெடுதியுண்டாம்
௭-கிருகப்பிரவேசம்செய்தால் கிலேசமுண்டாம்
௮-கிருகப்பிரவேசம்செய்தவர் கீர்த்தியாய்வாழ்வார்.

௨௨. கிணறுகெல்ல நன்றோதீதோ.

௧-கிணறுகெல்ல நன்று
௨-கிணறுகெல்லப்பிரவேசித்தால் கெடுதியுண்டாம்
௩-கிணறுகெல்லினல் கெங்கைபெருகிகீர்த்திபெருகுவார்
௪-கிணறுகெல்ல கெங்கைபெருகாவாம்

௫-கிணறுகெல்லினால் கேணிபோற்சுரக்கும்
௬-கிணறுகெல்ல சரிந்துழுவார்கள்
௭-கிணறுகெல்லினால் கீர்த்தியுண்டாகும்
௮-கிணறுகெல்லினால் கெடுதியேயில்லை.

௨௩. அஸ்வங்கொள்ள நன்றோதீதோ.

௧-அஸ்வங்கொள்ள நன்று
௨-அஸ்வங்கொண்டால்பொருள்இழந்து அவலப்படுவார்
௩-அஸ்வங்கொண்டால் விர்த்தியடைவார்
௪-அஸ்வங்கொண்டால் அகமெலியுண்டாம்
௫-அஸ்வங்கொண்டவர்கள் அகங்களித்துவாழ்வார்
௬-அஸ்வங்கொண்டவர்கள் ஆவல்படுவார்
௭-அஸ்வங்கொண்டால் ஆரோக்கியமடைவார்
௮-அஸ்வங்கொண்டவர் அரசர்போலாவார்

௨௪. எருதுகொள்ள நன்றோதீதோ.

௧-எருதுகொள்ள நன்று
௨-எருதுகொண்டால் மனத்துக்குதுன்பமுண்டாம்
௩-எருதைக்கொண்டவர் இந்திரனைப்போலாவார்
௪-எருதைக்கொண்டவர்களுக்கு இடருண்டாம்
௫-எருதைக்கொண்டவர் இன்பமுற்றிருப்பார்
௬-எருதைக்கொண்டவர் இடர்பலவுண்டாம்
௭-எருதைக்கொண்டவற்கு இன்பமுண்டாம்
௮-எருதைக்கொண்டவர்கள் சந்தோஷமடைவார்.

௨௫. பசுக்கொள்ள நன்றோதீதோ.

௧-பசுக்கொள்ள நன்று
௨-பசுவைக்கொண்டவர்க்கு பால்பாக்கியமில்லை
௩-பசுவைக்கொண்டவர்களுக்கு பால்பாக்கியமுண்டாம்
௪-பசுவைக்கொண்டவர் தண்டனையடைவார்
௫-பசுவைக்கொண்டவர் பாக்கியம்பெறுவார்
௬-பசுவைக்கொண்டவர் பால்காணமாட்டார்

